--7--74

4 பக்கங்கள் 20 காசுகள்

# தீக் கதி[ர்]

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 | மதுரை | 2-7-74 | செவ்வாய் | மலர் 152

## சுதந்திர இந்தியாவின் வளர்ச்சி

பங்களூர், ஜூன் 28—

கர்நாடக மாநிலத்தில் மின்சாரப் பற்றுக் குறையின் காரணமாக பொதுத் துறையிலும் தனியார் துறையிலும் கிட்டதட்ட 70 சதவீதத் தொழிலாளர்கள் அரைகுறையாகவோ அல்லது முழுமையாகவோ லே—ஆப் விடப்படுவார்கள். அதாவது 3 லட்சம் இயந்திரத் தொழிலாளர்களில் 2லட்சத்துக்கும்மேற்பட்டவர்கள் லே—ஆப்பால் பாதிக்கப்படுவர். இதனை கர்நாடக மாநில தொழில் அமைச்சர் தெரிவித்தார்.

### ஏ. கே. ஜி. பேசிய கூட்டத்தைக் கலைக்க

# துப்பாக்கிச் சூடு, தடியடி

## பலர் படுகாயம்

திருவனந்தபுரம், ஜூன் 29—

தும்பா விண்வெளி ஆராய்ச்சி நிலைய அருகே தோழர் ஏ. கே. கோபாலன் பேசிய பொதுக்கூட்டத்தை கலைப்பதற்காக போலீஸ்காரர்கள் கண்மூடித்தனமாகத் துப்பாக்கிச் சூடும், தடியடிப் பிரயோகமும் நடத்தினர். இதனால் ஏராளமானோர் காயமடைந்தனர்.

இந்தக் கொடிய அடக்குமுறை சம்பவமும் நேற்று நடந்தது.

தும்பா விண்வெளி ஆராய்ச்சி நிலையத தொழிலாளர்கள், தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தி, அந்த ஆராய்ச்சி நிலையத்தின் அருகே ஒரு பொதுக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தனர்; அதில் பேசுவதற்குத் தோழர் ஏ. கே. கோபாலனை அழைத்திருந்தனர்.

இந்தப் பொதுக் கூட்டத்திற்கு ஒலி பெருக்கியை உபயோகிக்கக் கூடாது என்று விண்வெளி நிலைய போலீஸ் தடை போட்டது.

ஆனால், தொழிலாளர்கள் இந்தத் தடையை மீறி ஒலி பெருக்கி வைத்தனர்.

தோழர் ஏ. கே. கோபாலன், மேடையில் ஏறி 'மைக்' முன் நின்று பேச ஆரம்பித்தார். அப்போது போலீசார் வந்து, பேசுவதற்கு 'மைக்' வைததுக் கொள்ளக் கூடாது என்றனர் ஆனால், தோழர் ஏ கே கோபாலன், போலீசின் இந்தப் பேச்சுரிமைத் தடையை மீறி 'மைக்'முன் சொற்பொழிவாற்றினார்.

அப்போது போலீஸ்காரர்கள், 'மைக்'கை அக்கிரமமாகப் பறித்தனர். இதைக் கண்ட தொழிலாளர்கள் வெகுண்டெழுந்தனர். போலீசின் அடக்குமுறையை எதிர்த்து ஆவேசக் குரல் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர். அப்போது, போலீஸ் படை, தொழிலாளர் மீது வெறித்தனமாகத் தடியடி நடத்தியது. ஆகாயத்தை நோக்கி, துப்பாக்கியால் சுட்டது.

கொடிய தடியடியின் காரணமாக ஏராளமான தொழிலாளர்கள் காயமடைந்தனர். இவர்களில் பலர் படுகாயமடைந்து, மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

மிருகத்தனமான போலீஸ் அடக்குமுறையினால் பொதுக்கூட்டம் தொடர்ந்து நடத்த இயலாமற்போனது

# இந்திய-சீன உறவுக்கு நல்ல வாய்ப்புகள்

ஹாங்காங், ஜூலை. 1—

சீன மக்கள் இந்திய மக்களுடன் நட்புறவாக இருக்க, மெய்யாகவே அக்கறையும் ஆர்வமுமிக்கவர்களாக இருக்கிறார்கள் என்றும்—இவ்விரு நாடுகளின் அரசுகளுக்கிடையே தீர்க்கப்பட வேண்டிய பிரச்னைகள் ஒருபுறம் இருந்தாலும், இரு நாடுகளின் மக்களும் நட்புறவாக விளங்க முடியுமென்றும்—சாத்தியமானால், பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னே இந்தி-சீனிபாய்பாய் (இந்தியர்களும் சீனர்களும் சகோதரர்களே!) என்ற ஆரவாரம் செய்த அதே காலகட்டத்துக்குத் திரும்ப முடியும் என்றும் டாக்டர். கோட்னிஸ் நினைவுக்குழு தலைவர் திரு. டேனியல் லத்தீப் தெரிவித்தார்.

1949-ம் ஆண்டுக்கு முன்னால் சீனாவில் கம்யூனிஸ்ட் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னால்—ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்த்து சீனக் கம்யூனிஸ்டுகள் போராடிக்கொண்டிருந்த காலத்தில் இந்தியாவின நல்லெண்ணத்தையும் ஆதரவையும் தெரிவிக்கும் அடையாளமாக இந்திய தேசீய இயக்கம் டாக்டர் கோட்னிஸ், டாக்டர் பாசு ஆகியவர்கள் தலைமையில் ஒரு வைத்திய தூதுக் குழுவை சீனாவுக்கு அனுப்பி வைதத்து.

### கோட்னிஸ் நினைவுக் குழு

அந்த வைத்தியக் குழுவினர், வடசீனாவில், மலைக்குகைகளை படை தளமாகக் கொண்ட சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டுதலின் படி சேவை புரிந்து வந்தது. இந்தக் குழுவினர் ஏனன் மலைப்பகுதிகளிலும் பிற இடங்களிலும் காயமுற்ற படை வீரர்களுக்கு சிகிச்சை செய்து வந்தார்கள்.

அவ்வாறு சேவை புரிந்து கொண்டிருக்கும் போதே, டாக்டர் கோட்னிஸ் அவர்கள் இறந்து போனார். அவரது மறைவு குறித்து சீனத் தலைவர்கள் அனைவரும் கண்ணீர் வடித்தார்கள்.

டாக்டர் கோட்னிஸ் அவர்களின் நினைவாக, மேற்கு வங்கத்தில் ஒரு குழு அமைக்கப்பட்டு இந்திய—சீன நட்புறவுக்காக அயராது பாடுபட்டு வருகிறது.

### சீனாவுக்குச் சென்றனர்

இந்திய—சீன எல்லைத் தகராறு காரணமாக, நல்லுறவுகள் தற்காலிகமாகப் பாதிக்கப்பட்டு தொழில், வர்த்தகம், கலாசாரம் ஆகிய பல்வேறு துறைகளில் நடக்க வேண்டிய எத்தனையோ நல்ல காரியங்கள் முடங்கிக் கிடப்பதால், இந்திய—சீன நட்புறவு இயக்கம் மேலோங்க முடியாமலிருக்கிறது.

இந்த நிலையில் சென்ற மாதம் கல்கத்தாவிலிருந்து, டாக்டர் கோட்னிஸ் நினைவுக் குழுவினர், திரு. டேனியல் லதீப் அவர்களின் தலைமையில் சீனாவுக்குச் சென்று, 5 வாரங்கள் சுற்றுப் பயணம் செய்தனர்.

டாக்டர் டேனியலின் கருத்துக்களைப் பற்றி "இந்தியன் எக்ஸ்பிரஸ்" நிருபர் பி.கே. திவாரி பின்வருமாறுகுறிப்பிடுகிறார்.

### கோபதாபங்கள் எங்குமே இல்லை

டாக்டர் டேனியல் கூறுகிறார். "எங்கள் குழுவினர் 5 வாரகாலமாக சீனாவின் பல்வேறு ஊர்களுக்கும் சென்று பல்வேறு தரப்பினரையும் சந்தித்தோம். அந்தந்த இடங்களில் நாங்கள் மகிழ்ச்சியான அனுபவங்களைப்பெற்றோம். நாங்கள் எங்கு சென்றாலும், எங்கள்பால்விரோத குரோதமாக எந்த வொரு சீனரும்நடந்துகொள்ளவில்லை யென்பதுமட்டுமல்ல—எல்லாஇடங்களிலும் இந்திய மக்களுடன் நட்புறவாக இருக்கவேண்டுமென்ற பேரார்வத்தையும் காட்டினார்கள்.

### முட்டுக்கட்டை நிலை நெடுநாள் நீடிக்காது

எங்கள் குழுவினரை வரவேற்றுப் பேசிய கம்யூனிஸ்ட் கட்சியின் உபதலைவரும் இராணுவக்கமிஷனின் உப தலைவரும் சீனத்தலைவர்மா-சே-துங் முன்னாள்இந்திய தூதுவர் பி. கே மிஸ்ராவிடம் கூறிய வாசகங்களை எங்களுக்கு நினைவூட்டினார்கள். அதாவது, மிஸ்ராவிடம் மா சே-துங் பேசும்போது, "இந்தியாவும், சீனாவும் என்றென்றும் முட்டுக்கட்டை நிலைமையில ஸதம்பித்து இருக்கமுடியாது"—என்று கூறியிருப்பதை நினைவுபடுத்தினார்கள்.

இராணுவக் கமிஷன் உபதலைவர் மார்டின் யே-சென-ஜங் பேசுகையில், 'இந்தியாவுக்கும் சீனாவுக்குமிடையேயுள்ள உறவுகள் இன்று நேற்று ஏற்பட்டவையல்ல. தலைமுறை தலைமுறையாக வந்திருக்கிற உறவுகளாகும். அதை மேலும் வளர்ப்பதற்கே நாங்கள் விரும்புகிறோம்" என்றார்.

### வியாஸிடம் கேள்விகள்

மற்றும் இந்த தூதுக்குழுவில் ஒருவரும், காங்கிரஸ்காரருமான டாக்டர் வியாஸ் எம். பி. அவர்களைப்பார்த்து. "வியாஸ் அவர்கள் இந்தியாவின் கிசிங்கர்', என்று குறிப்பிட்டார். எந்தவொரு அருத்தமுமில்லாமல் இப்படி அவர் குறிப்பிடடிருக்கமாட்டார்.

திரு. டேனியல், தங்கள் சீன விஜய[ம்] குறித்துக் குறிப்பிடுகையில், "நாங்கள் எங்கு சென்றாலும், சீனர்கள் அனைவரும், பெண்களும் குழந்தைகளும் உள்பட—எங்களை அன்புடனே கோஷமிட்டு வரவேற்றார்கள்" என்றார்.

இக்குழுவின் வருகையால், இரு நாடுகளும் ஒருவருக்கொருவர் நல்ல முறையில் புரிந்துகொள்ள உதவும் என்று எக்ஸ்பிரஸ் நிருபர் குறிப்பிடுகிறார்.

### உறவு கொள்ள அக்[கறை]

சீனத்தலைவர்கள், டாக்டர் வி[யாஸ்] எம். பி. யிடம், இந்திய அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கைபற்றி மிகு[ந்த] அக்கறையுடன் கேட்டதாகத் தெரி[வ]கிறது.

இந்திய அரசாங்கம் உல[க]... களில் சுயேச்சையான ... தான் கடைப்பிடிக்கிறது ...பதை பொழுது சீனததலைவர்க[ள்] நல்ல மு[றை]யில் உணருகிறார்கள் ...று வியாஸ் கூ[றி]னார்.

இன்று சீனத் [தலை]வர்களின் மனப்போக்கை நோக்குமிட[த்து], இந்தியாவுடன் ஸ்தானீகர் உறவை மீ[ண்]டும் ஏற்படுத்திக்கொள்ள விரும்புகிறா[ர்கள்] என்று தெரி[ய] வருகிறது என்று வியா[ஸ்] கூறியுள்ளார்.

மேலும், மூன்றாவது [உ]லகம் என்ப[து] இந்தியாவின் அயல் நா[ட்]டுக் கொள்கையைப் போன்ற கொள்[கை]களையுடைய கூட்டுச் சேரா நாடுகளே [எ]ன்று வியாஸ், சீனதசலைவர்களிடம் கூறி[யு]ள்ளார்.

### அணுசோதனைக்கு [வ]ரவேற்[பு]

இந்தியாவின் [அ]ணுசோதனை கொள்கையையும் சீனா [எ]திர்க்கவில்லை யென்றும், அணுசோதனை ...து, ஒரு சில அணு நாடு வல்லரசுகள் ... ஏகபோகமாக இருப்பதை உடைத்தெறிவது நல்லதே என்றும சீனத்தலைவர்கள் கருது[]கிறார்கள் என்றும் வியாஸ் தெரிவித்தா[ர்] என்பதாக இந்தியன் எக்ஸ்பிரஸ் நிருப[ர்] எழுதியுள்ளார்.

### ஆலடி அருணா கட்சி தாவல்

## தமிழக சட்ட சபையில்

# அண்ணா தி. மு. க. பிரதான எதிர்கட்சி!

சென்னை ஜூன் 30—

நெல்லை மாவட்டம் ஆலங்குளம் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஆலடி அருணா, தி.மு.க.விலிருந்து அண்ணா தி. மு. க. வுக்கு தாவியதை யொட்டி சட்டசபையில் அண்ணா தி.மு.க. பிரதான எதிர்ககட்சி என்ற இடத்தை அடைந்துள்ளது.

எதிர்கட்சி தலைவர் பதவியை சிண்டிகேட் தலைவர் பொன்னப்ப நாடார் இழந்து விட்டார். ஆலடி அருணா அ. தி. மு. கவில் சேர்ந்ததினால் அ.தி.மு.க. எம். எல், ஏக்கள் எண்ணிக்கை 14 ஆகஉயர்ந்தது.

சிண்டிகேட் எம், எல். ஏக்கள் எண்ணிக்கை 13.

### முதலமைச்சரும் தி.மு.க.தலைவர்களும் நடத்திவரும் இனவெறி பிரச்சாரம் நிற்காவிடில்

# அளித்த வாக்குறுதி அர்த்தமற்றதாகிவிடும்

## தமிழக சி. ஐ. டி. யூ. எச்சரிக்கை

கோவை, ஜூன் 30—

"தமிழக முதலமைச்சரும், தி மு க தலைவர்களும், இனவெறியைத் தூண்டும் தங்களது பிரச்சாரங்களை உடனே நிறுத்தாவிடில், 'சிறுபான்மை மொழி மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படும்" என்று முதலமைச்சர் கருணாநிதி அளித்த வாக்குறுதி அர்த்தமற்றதாகி விடும்" என்று தமிழ் மாநில சி ஐ டி யூ எச்சரித்துள்ளது.

தமிழ் மாநில சி ஐ டி யூ வின் நிர்வாகக் குழுக் கூட்டம் கடந்த ஜூன் 28, 29, 30 ஆகிய தேதிகளில் கோவையில் நடந்தது தமிழக சி ஐ டி யூ தலைவர் தோழர் கே. ரமணி தலைமை வகித்தார்.

இக்கூட்டத்தில் தமிழகத்தில் அண்மைக் காலமாக நடத்தப்பட்டு வரும் இன வெறி இயக்கம் சம்பந்தமாக ஆழ்ந்த கவலையுடன் பரிசீலிக்கப்பட்டு கீழ்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

இனவெறியைத் தூண்டி தொழிலாளி வர்க்கம் மற்றும் உழைப்பாளி மக்களிடையே இன அடிப்படையில் பகைமையை ஊட்டும் முயற்சியை சி ஐ டி யூ ஆரம்பம் முதற் கொண்டே கண்டித்து வநதுள்ளது.

### அரசுகளின் ஆதரவு

பம்பாயில் சிவசேனை, அசாமில் லட்சித் சேனை போன்ற இயக்கங்களை சி ஐ டி யூ பலமாக எதிர்த்து வந்திருப்பதே இதற்குச் சான்றாகும்.

இத்தகைய இயக்கங்கள் தொழிலாளிவர்க்க இயக்கத்தையும் ஜனநாயக இயக்கத்தையும் பிளவுபடுத்தி, அவர்களுடைய போராட்டங்களைப் பலவீனப்படுத்துவதற்காக. சுரண்டும் வர்க்கங்களின் உதவியுடன், அவ்வர்க்கங்களின் பாதுகாவலர்களாக உள்ள அரசுகளின் ஆதரவுடன் நடத்தப்படுகின்றன.

### ஒருமைப்பாட்டுக்கு ஆபத்து

சென்ற பொதுத் தேர்தலுக்குப்பிறகு, வேலையில்லாத்திண்டாட்டம், விலைவாசி உயர்வு மற்றும்நாட்டு மக்களின் அத்தியாவசியக் கோரிக்கைகளைத் தீர்க்க முடியாத காங்கிரஸ் அரசுகள் பல்வேறுமாநிலங்களில் 'மண்ணின் மைந்தர்களுக்கே வேலை' என்ற கோஷத்தைக் கிளப்பி, அதன் அடிப்படையில் நடவடிக்கைகளை எடுக்கத் தூண்டிவருகின்றன.

இது நீடிக்குமானால், இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்கே ஆபத்து ஏற்படுவது மட்டுமல்லாமல், இன்றைய இந்திய நிலப்பிரபுத்துவ—முதலாளித்துவ சமூகத்தை மாற்றி சோசலிசசமுதாய அமைப்பைநோக்கிப் போவதற்கு அத்தியாவசியமான இந்தியா பூராவும் உள்ள தொழிலாளிவர்க்க மற்றுமுள்ள உழைப்பாளி மக்களுடைய ஒன்றுபட்ட போராட்டத்துக்கே மிகப்பெரும் குந்

[4-ம் பக்கம் பார்க்க)

## இந்திய - பல்கேரிய அமைச்சர்கள் பேச்சுவார்த்[தை]

வியன்னா, ஜூன். 28—

இந்திய வெளிநாட்டு அமைச்சர் சுவரண்சிங்கும் பல்கேரிய நாட்டு அமைச்சர் பீட்டர் மலாடெனேவும் நேற்று பேச்சு வார்த்தை துவக்கினர்.

இந்தியாவுக்கும் பல்[கேரி]யாவுக்கு மிடை[யே] யான உறவுக[ள்], சர்வதேசப் பிரச்னை[கள்] ஆகியவை குறித்து அ[வர்]கள் பேசினர்.

# ஊழல் ஒழியுமா?

ஊழல்களை ஒழிப்பது எப்படி என்று, பிரதமர் இந்திராகாந்தியுடன் உட்கார்ந்து விவாதிக்க நான் தயாராக இருக்கிறேன். நான் பேசிக்கொண்டிருக்கும்போதே, ஒரு முதலாளி வந்து, ஒரு 5 லட்சம் ரூபாயைக் கொடுத்து, ஒரு லைசென்ஸை வாங்கிக் கொண்டு போய்விடுவாரே!

நிலைமை இப்படியிருக்கும்போது, நாங்கள் கூடிப் பேசுவதால் என்ன பயன் ஏற்படப் போகிறது?

—ஜெயப்பிரகாஷ் பேச்சு

— ஸ்டேட்ஸ்மென் : 15-6-74

உர விலை ஏற்றத்தையும்,
உர விநியோக ஊழலையும் எதிர்த்தும்.
5 ஏக்கருக்கு உட்பட்ட விவசாயிகளுக்கு[ம்]
குத்தகை—வார விவசாயிகளுக்கும்
72ம் வரு[ட]
விலையில் உரத்தையும், பூச்சிக்கொல்[லி]
மருந்தையும் கொடுக்கக் கோரியும்
விவசாயிகள் கமிட்டியின் கண்காணிப்[பி]
உரத்தை விநியோகிக்க வற்புறுத்தியும்

# 5-7-74-ம் நாள்

(காலை 7மணி முதல் மாலை 6மணி வ[ரை])

# தமிழக மெங்கும் உண்ணாவிரதம்

# ... பகுதி ... லைகளை ...ணயிக்கும் ... பந்தம் கையெழுத்தானது

புதுடெல்லி, ஜூன்.28—

இலங்கைக்கும் இந்தியாவுக்குமிடையே கடல் பகுதி எல்லைகளை நிர்ணயிக்கும் உடன்பாட்டில் இரு நாட்டு பிரதமர்களும் இன்று (ஜூன் 28) கையெழுத்திட்டனர்.

இவ்வொப்பந்தப்படி இலங்கையின் எல்லைக் கோடு கட்சத் தீவிற்கு மேற்கே 16 கிலோ மீட்டர் வரை அமைகிறது.

இவ்வுடன்பாட்டில் கட்சத் தீவு மீதான ஆதிபத்திய உரிமை மட்டுமின்றி இரு நாடுகளும் அத்தீவின் கடல் பகுதியை உபயோகித்தல், கப்பல் ஓட்டும் உரிமைகள், மீன் பிடிப்பு, தலயாத்திரை கடலில் தாதுவள ஆராய்ச்சி உரிமைகள் ஆகியவையும் உடன்பாட்டில் வரையறுக்கப்பட்டுள்ளன.

## ஒப்பந்தம்

இவ்வொப்பந்தம் சம்பந்தமாக டில்லியிலும், கொழும்பிலும் வெளியிடப்பட்ட அரசாங்க அறிவிப்பில் இருநாடுகளிடையே நெருக்கமான உறவு ஏற்படும் பொருட்டு கிடைக்கக் கூடிய வரலாற்றுச் சான்று, சட்ட நுட்ப விஷயங்களை ஆராய்ந்த பிறகே இவ்வொப்பந்தம் முடிவாகியது எனக் கூறுகிறது.

மேலும், இந்த நோக்கத்தினை இரு முன்னிட்டே பிரதமர்களின் ஆலோசனையின் படியே இருநாட்டு உயர் அதிகாரிகளது ஆலோசனைகள் பலமுறை நடைபெற்றன என்றும் அவ்வறிவிப்பு கூறுகிறது.

இவ்வொப்பந்தத்தில் வரலாற்று சான்றுகள், சர்வதேச சட்டக் கொள்கைகள் முன் மாதிரிகள் இவைகளுக்கு ஏற்பவே பொருத்தமான எல்லைக் கோடு பாக் ஜல சந்தியில் வரையறுக்கப்பட்டுள்ளன என்றும் அவ்வறிவிப்பு கூறுகிறது.

## இந்திரா கையெழுத்திட்டார்

மேலும் இவ்வொப்பந்தம் இருநாடுகளின் பார்லிமெண்ட்களிலும் சமர்ப்பிக்கப்பட்டு அங்கீகாரம் பெற்றுக் கொண்டு ஒப்பந்த முழு விபரம் பகிரங்கமாக அறிவிக்கப்படும் என்றும் அவ்வறிவிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது,

இவ்வொப்பந்தத்தில் இந்திய பிரதமர் கையெழுத்திட கொழும்பிலிருந்து இலங்கை வெளியுறவு செயலாளர் ஜெயசிங்கே என்பவர் ஒப்பந்த நகலை டெல்லி கொண்டுவந்தார்.

அதில், டில்லியில் உள்ள வெளியுறவு இலாகாவின் மாநாட்டு அறையில் வைத்து, பிரதமர் இந்திரா கையெழுத்திட்டார்.

அதேபோல், டில்லியிலிருந்து வெளியுறவு செயலாளர் கேவல்சிங் ஒப்பந்த நகலை கொழும்பிற்கு கொண்டுபோனர். அதில் இலங்கை பிரதமர் சிரிமாவோபண்டாரநாயகா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்.

---

... இந்திய ... வெளியிட் ... குச் சொந்தமா ...க்கிறது.

...லம் இரு நாடுகளுக்கு ...காலமாக இருந்து வந்த ஒரு தகராறு

...வு இலங்கைக்குச் சொந்தமானது என்று ...அங்கீகாரம் வழங்குமுன் நம் இருநாடுகளின் ...கள் இதன் வரலாறு சம்பந்தமான விபரங்களைச் ...தார்கள். அவற்றின் அடிப்படையிலேயே இந்த ...வு.

...ஜனசஞ்சாரமில்லாக குடிதண்ணீர்கூட கிடைப்...ன இந்தச் சிறு தீவு மீது இரு நாடுகளும் உரிமை ...டி வந்துள்ளன. இதனல் தேவையற்ற கோப...ங்கள் வளர்க்கப்பட்டு வந்தன. இன்னும் சில மாதங்...க்கு இத்தகைய உணர்ச்சிகள் எதிரொலிக்கப்படுவது ...கையே.

இந்தத்தீவு சம்பந்தமாக எடுக்கப்பட்டுள்ள முடிவு ...கொள்கையை அடிப்படையாகக் கொண்டதுஎன்று ...காடுகளின் அரசாங்கங்களும் அறிவிக்கின்றன.

அண்டை நாடுகளான இந்தியாவும் இலங்கையும் ...ம் கடல்கரை எல்லை எது என்பதை ஆழமான விபரங்களுடன் பரிசீலனை செய்ததாகவும், அந்தப்பரிசீலனையின் அடிப்படையில், இரு நாடுகளுக்கிடையேயுள்ள பாக்ஜலசந்தியின் கடல் எல்லை கச்சத் தீவுக்கு மேற்கே ஒரு மைல் தூரத்தில் வருவதாகவும், ஆகவே இந்த எல்லைக்கு அப்பால் 'கச்சத்தீவு' இருக்கின்ற காரணத்தால் அது இலங்கைக்குச் சொந்தமானதென்று இந்தியா அங்கீகரிப்பதாகவும் அறிவிக்கப்படுகிறது.

இதுதான் கச்சத்தீவு பற்றி ஒருமுடிவுக்கு வருவதற்கு ஆதாரமாக உள்ள கொள்கை என்று இரு தரப்பினரும ...ப்புக்கொள்கின்றனர்.

இந்தத்தீவு குறித்து இந்திய அரசு மேற்கொண்ட ...ணுகுமுறை சர்ச்சைக்குரித்தா...தாக இருக்கக்கூடும்.

தமிழ்நாடு சட்டசபையின் ஆலோசனையையும் ... அதன்பிறகு ஒரு முடிவு செய்திருககலாம்.

...னும், இப்பிரச்சினையை ஒரு முடிவுக்குக் ...ண்டு...வது அவசியம்.

வெ...கடற்பாறையான இந்தச் சிறு தீவு...றித்து இந்தியாவும் இலங்கையும் ஒரு யுத்தத்தில் ...றங்குவதை தமிழ் மக்கள் உள்பட எந்த ...தியரும் ஏற்க மாட்டார்கள்.

இன்று ...னர்ச்சி வசப்படுவோர் உள்ளிட்டு அனை...வரும் இந்தச ...று கற்பாறைக்காக இலங்கையுடன் ஒரு எல்லைச் ...ண்டையும், கெடுபிடியுத்தமும் தொடர்ந்துநட...திக்கொண்டிருப்பதை விரும்பமாட்டார்கள் என்று நம்புகி...றம்.

இதை ...ரு சர்வதேசியப் பிரச்சினையாகச் சூடாக்கி ஐ. நா. பாது...புக் கவுன்சிலின் மத்தியஸ்திற்குவிட்டு, அங்...யத் துரு...களை மத்தியஸ்த வேலைகளுக்காக இங்கு அழைக்க ...ம்ப மாட்டார்கள் என்றும் நமபுகிறோம்.

இந்தி... இலங்கை ஆகிய இரு நாடுகளின் நேசமும் ...கட்புறவும ... கடற்பாறையில் மோதி உடைந்துவிட அனுமதிப்ப... புத்திசாலித்தனமல்ல, வி...வகமுமல்ல.

இலங்கையுடன் ஒப்பிடுகையில் இந்தியா ஒரு ...மாபெரும் தேசம்.

இந்தச்சிறு எல்லைத் தீவுக்காக வேண்டி இலங்கையுடன் நாம் ஒரு கெடுபிடியுத்தத்தில் இறங்குவோமானல் ...உலகம் நம்மைப் பார்த்துத்தான் சிரிக்கும்,

ஆகவே பிரச்சினையை இத்துடன் இன்று இருநாடுகளுக்குமிடையே ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்துடன் ஒரு முடிவுக்குக்கொண்டு வருதல் நல்லது.

---

# இரயில்வேயில் அமைதி நிலவ போராட்டக்குழுவுடன் பேசுக!

## மகா சம்மேளனம் அறிவுரை

புதுடெல்லி, ஜூலை. 1—

அகிலஇந்திய இரயில்வே ஊழியர் மகா சமமேளனத்தின் காரியக் கமிட்டிக் கூட்டம், இரயில்வேத் தொழிலாளர்களின் போராட்ட ஒருங்கிணைப்புக் குழுவின் கோரிகககைளை ஆதரித்து தீர்மானம நிறைவேறறியுள்ளது.

"இரயில்வேயில் சகஜ நிலை ஏற்படவேண்டுமானல் போராட்டக்குழுவுடன் தான் அரசாங்சும பேச்சு வார்த்தை நடத்த வேண்டுமென்றும்— போராட்டக் குழுவுடன் பேச்சுவார்த்தை நடததி, அவர்களது கோரிக்கைகளின் மீது ஒரு உடன்பாடு கணடாலொழிய — அதுவரைக்கும்— இரயில்வேயில் மாமூல் நிலைமை ஏற்படவே போவதில்லை" — என்றும் காரியக்கமிட்டி அரசினருக்கு அறிவுறுத்தியுள்ளது

## பழிவாங்கலை நிறுத்து

மற்றும் "இரயில்வே தொழிலாளர்களின் போராட்ட ஒருங்கிணைப்புக் குழு ஒன்றுதான் ரயில்வே தொழிலாளர்களின் உண்மையான பிரதிநிதியாகும்"— என்றும் காரியக் கமிட்டி தீர்மானத்தில்குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மேலும் இரயில்வேயில் நடத்தப்பட்டுள்ள சகலவிதமான பழிவாங்கல் நடவடிக்கைகளையும் ரத்து செய்தாலதான், சகஜநிலை ஏற்படுமென்றும் காரியக்கமிட்டி மற்றொரு தீர்மானத்தில் குறிப்பிட்டுளளது.

---

# மதுரையில் மாதர் சங்க கூட்டங்கள்

மதுரை, ஜூன். 28—

தமிழ்நாடு ஜனநாயக மாதர் சங்கத்தின் மதுரை முகவை மாவட்ட மாநாட்டையொட்டி மதுரை நகரின் பல பகுதிகளிலும் மாதர் சங்க கூட்டங்கள் நடந்து வருகின்றன

9வது வார்டு முதல் 12வது வார்டு வரையுள்ள பகுதி மாதர்கள் கூட்டம் 26ந்தேதியன்று முனிச்சாலையில் உள்ள சிஐடியூ கிளைச் சங்கத்தில் நடந்தது,

கடந்த ஓராண்டு காலத்தில் மாதர் சங்கம் சார்பில் நடத்தப்பட்டுள்ள இயக்க வேலைகள் குறித்து, மாதர் சங்க நகர்க்குழு உறுப்பினர் தோழர் பிச்சையம்மாள் விளக்கி பேசினர்.

மாவட்ட மாநாடு குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நகர்க்குழு உறுப்பினரும் மாநகராட்சி மன்ற உறுப்பினருமான தோழர் வெ. வீரபத்திரன் பேசினர்.

மாநாட்டுக்குள் 150 உறுப்பினர்களைச் சேர்ப்பது என்றும் மாதர் சங்க மாநாட்டையொட்டி ஜூலை 14-ந்தேதி நடக்கும் ஊர்வலத்திற்கு ஏராளமான பெண்களைத் திரட்டுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

இக்கூட்டத்திலேயே, 14 பெண்கள் மாதர்சங்க உறுப்பினர்களாகப் பதிந்து கொண்டனர்.

## காமராஜபுரம்

காமராஜபுரம் கிளைமாதர் சங்கக் கூட்டம் கடந்த 27-ந் தேதியன்று, மாதர் சங்கத்தின் மதுரை நகர் தலைவி தோழர் வீருக்மணி அம்மாள் தலைமையில் நடந்தது.24பேர் கலந்து கொண்டனர்.

மதுரை நகரில் மாதர் சங்கம்சார்பில் கடந்த ஓராண்டு காலமாக நடந்த இயக்க வேலைகள் குறித்து தோழர் கமலம் அம்மாள் விளக்கிப் பேசினர்.

தோழர் வெ.வீரபத்திரன், மாதர்சங்க மாவட்டமாநாடு பற்றி விளக்கிப் பேசினர்.

மாதர் சங்கத்துக்கு இப்பகுதியில் நூறு உறுப்பினர்களைச் சேர்ப்பது என்றும், மாநாட்டு நன்கொடையாக 25ரூபாய் நிதி திரட்டுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

---

# சோவியத், அமெரிக்க தலைவர்கள் கண்ட உடன்பாடுகள்

மாஸ்கோ, ஜூன். 28—

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் பிரஸ்னேவும், அமெரிக்க ஜனதிபதி நிக்சனும் நடத்திய முதல்நாள் சந்திப்பில் 3 விஷயங்களில் உடன்பாடு கண்டுள்ளனர்.

## இருதய உடன்பாடு

மனித இருதயத்தை எடுத்துவிட்டு செயற்கை இருதயத்தை வைப்பது சம்பந்தமாக இரு நாடுகளும் ஆராய்ச்சி செய்து வருகின்றன. இதுவரை இரு நாடுகளும் தெரிந்து கொண்ட ஆராய்ச்சி முடிவுகளை இணைத்து கூட்டாக மேலும் ஆராய்ச்சி செய்வது என இருதய உடன்பாடு செய்யபபட்டுள்ளது.

மற்ற இரு உடன்பாடுகள் எண்ணை வளம் பற்றியும், வீடுகள் கட்டுதல் பற்றியும் இரு நாடுகளுக்கிடையே உடன்பாடுகள் ஏற்பட்டுள்ளன.

இரு தலைவர்களும் பேச்சு வார்த்தைகளை அதிக நேரம் நடததும் பொருட்டு, மாஸ்கோவிற்கு வெளியேஉள்ள விண் வெளி பயணிகளுக்கான பயிற்சி நிலையத்தை நிக்சன் பார்வையிடுவதாக இருந்த திட்டம் கைவிடப்பட்டது.

## பிரஸ்நேவ் அறிக்கை

முதலில் நடைபெற்றபேச்சு வார்த்தைக்குபின் பிரஸ்நேவ் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

அதில் இருநாடுகளுக்கிடையே சமாதானத்திற்கான பேச்சுவார்த்தை போக்கு முதல் கட்டத்தைக் கடந்துள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இரு நாடுகளுக்கிடையே ஏற்படும் ஒப்பந்தத்தில் எந்தவித ரகசியமும் இருக்காது என்றும் தனது அறிக்கையில்தெரிவித்திருந்தார்.

## நிக்சனின் அஞ்சலி

கிரெம்ளின் மாளிகைக்கு பக்கத்தில் இருக்கின்ற சோவியத் ராணுவ வீரர்களின் சமாதிக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செய்தார். அதனபின்புதான் பேச்சுவார்த்தை நடத்தச் சென்ருராம்.

---

# சிண்டியிலிருந்து விலகல்

கோவை, ஜூன், 28—

கோவை இரத்தினபுரியை அடுததுள்ள கணபதி பஞ்சாயத்திற்குட்பட்ட நால்வர் லேஅவுட் பகுதியைச் சார்ந்த ஏ. சி. முகதுசாமி, ஜி. எஸ். பொன்னுசாமி, சபாபதி, எம் பாலசுப்ரமணியம், துரைசாமிமற்றும் பலரும் கலை என்ற பெயரால் பெரும் பணக்கார வர்க்கத்திற்கு ஆதரவு கொடுத்து வரும் சிண்டிகேட் காங்கிரசில் இருந்தும் 'தவப்புதல்வன் சிவாஜி கணேசன்' ரசிகர் மன்றத்தில் இருந்தும் விலகினர். (இவர்கள் விலகியதால் அம்மனறம் கலைக்கப்பட்டுவிட்டது)

## மார்க்சிஸ்ட் கட்சியில் சேர்ந்தனர்

தொழிலாளி வர்க்க ஸ்தாபனமான மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சியில் சேர விண்ணப்பித்துள்ளனர்.

மொத்தம் 15 பேர்கள் இவர்களுடன் விண்ணப்பித்துள்ளனர்.

இதில் அம்மன்றத்தின் தலைவராக ஏ, சி. முத்துச் சாமியும்[இவர் கடந்த 20 வருடங்களாக காங்கிரஸ் உறுப்பினராக உள்ளவர்) ஜி. எஸ். பொன்னுசாமி, சபாபதி ஆகிய இருவரும் செயலாளராகவும், எம். பாலசுப்ரமண்யம் பொருளாளராகவும் இருந்தனர்.

---

# மின்சார ஊழியர் சங்கம்

## புத்தாண்டு நிர்வாகிகள்

மதுரை, ஜூன். 30—

சென்ற 22—6—74 சனிக்கிழமை மதுரை திடீர்நகரில் உள்ள தமிழ்நாடு மின்சார போர்டு தொழிலாளர் சங்க கட்டிடத்தில் தமிழ்நாடுமின்சார ஊழியர் சங்கத்தின் மதுரை—முகவை திட்டக் குழு கூட்டம் திண்டுக்கல் கிளைச் செயலாளர் தோழர் ஆறுமுகத்தாண்டவன் தலைமையில் நடைபெற்றது.

அவ்வமயம் கீழ்க்கண்ட திட்ட நிர்வாகிகள தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

செயலாளர்: தோழர் சு. மல்லிகார்ஜுனன் (போடி)

பொருளாளர்: தோழர் ஏ. எம். புஸ்பவனம்

காசாளர்—திருப்புவனம்

## நிர்வாகக்குழு

1 தோழர் ஏ. அப்துல் வஹாப்—இராமநாதபுரம் திட்டம்.

2 தோழர் ஜே. எஸ். சாங்காராம—இராமநாதபுரம் திட்டம்,

3 தோழர் கதிர்வேலன் தேவகோட்டை.

4 தோழர் வெங்கடேசன் பழனி

5 தோழர் ஆறுமுகத் தாண்டவன்— திண்டுக்கல்.

6 பி. சிவப்பிரகாசம் —சின்னமனூர்

---

# ஆசிரியருக்கு...

# தொழிலாளர் நல அரசா? முதலாளி நல அரசா?

ஐயா,

திண்டுக்கல்லில் ஸ்ரீ ஸ்ரீநிவாசா என்றபெயருடைய பஸ் கம்பெனி நிர்வாகம் இந்த நான்குமாத காலமாக கம்பெனியை கதவடைப்பு செய்துள்ளது. இதில் பணியாற்றிய 36 தொழிலாளர்களின் குடும்பங்கள் இன்று வேலையில்லாமல் தவிக்கின்றன. "நாங்கள் உழைக்கத் தயார் எங்களுக்கு வேலை கொடு" என்று இந்த நான்கு மாத காலமாக அத் தொழிலாளர்கள் போராடி வருகின்றனர்.

இந்த நிர்வாகம் இந்த நான்குமாத காலமாக கம்பெனியை கதவடைப்புசெய்ததோடு மட்டுமில்லாமல், இதில் பணியாற்றிய தொழிலாளர்களுக்கு சட்டப்படி கொடுக்கபபட வேண்டிய சம்பளத்தை இதுவரை கொடுக்காமல் சண்டித்தனம செய்து வருகிறது. தொழிலாளர்களைப் பட்டினி போட்டு எப்படியாவது பணியவைத்து விடலாம் என்று நப்பாசை கொண்டுள்ளது இந்த நிர்வாகம். ஆனல் இதில் பணியாற்றிய தொழிலாளர்கள் சீர்குலையாமல், ஒன்று சேர்ந்த சக்தியாக சங்கிலித் தொடர் போல் ஒன்றிணைந்துபோராடுகின்றனர்.

எங்களுடைய நியாயமான கோரிக்கைகளை இந்த நிர்வாகம்ஏற்க மறுப்பதோடு 'சி. ஐ. டி. யூ. வில் இருக்கிருர்களே' என்ற கெட்ட எண்ணத்தில் பழிவாங்க நினைக்கிறது. எங்களுடைய பிரச்சனைகளை போக்குவரத்துத் துறையில் சம்பந்தப்பட்ட அனைத்து அதிகாரிகளுக்கும, ஸ்தலத்திலுள்ள அதிகாரிகளுக்கும் தெரியப்படுத்தியும, அவர்கள் வாயிருந்தும் ஊமைகளாய், காதிருந்தும் செவிடராய் இதுவரை எந்தவித நடவடிக்கையும் எடுக்கவில்லை. இந்தத் தொழிலாளர்கள் பட்டினியோடு போராடி வருவதை, இந்த நிர்வாகத்திற்கு தெரியப்படுத்தும் வகையில் தங்கள், தங்கள் குடும்பங்களோடு நிர்வாகத்தின் வீட்டிற்குச் சென்று, "எங்களுக்குச்சேர வேண்டிய சமபளத்தைக் கொடு, இல்லையேல் எங்கள் குடும்பங்களுக்கு சோறு போடு" என்று கேட்டோம். ஆனல் இந்தநிர்வாகத்தினர் உடனடியாக போலீசுக்கு போன் செய்து, "என் வீட்டைச சுற்றி: "கெரோ" செய்கிருர்கள்" என்று கூறினர்.

உடனே ஸ்தலத்திலுள்ள சி. ஐ. டி இன்ஸ்பெக்டர்கள், இன்ஸ்பெக்டர்கள், போலீஸ் ஆகிய அனைவரும் விரைந்து வந்து பேச்சுவார்த்தை நடத்தினர். அதன் விளைவாக இரண்டு தினங்களுக்குள் சம்பளம் வாங்கித் தருகிறோம் நீங்கள் எல்லோரும் கலைந்து செல்லுங்கள் என்று கூறினர்கள். ஆனல் இதுவரை இந்த நிர்வாகம் தொழிலாளர்களுக்கு சம்பளம் பட்டுவாடா செய்யவில்லை. ஸ்தலத்திலுள்ள அதிகாரிகளும் நிர்வாகத்தின் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

வெளியிலும், பத்திரிக்கைகளிலும், பெரிய வால்போஸ்டர்களிலும் "தொழிலாளர் அரசு" என பீற்றிக் கொள்ளும் தமிழக அரசின் உண்மை சொரூபம் இவ்வாறு ஒவ்வொரு போராட்டங்களின் போதும் வெளிப்படுகிறது.

இப்படிக்கு,

ஆர். ராமசாமி,

கண்டக்டர்

திண்டுக்கல்

---

# பண்ணை தொழிலாளர் சங்க அமைப்பு

தளவாய்புரம், ஜூன்,28—

தளவாய்புரம் வட்டார பண்ணை தொழிலாளர் சங்க அமைப்புக் கூட்டம் தோழர் பி. மாரியப்பன் தலைமையில் ஜூன் 23-ல் நடைபெற்றது.

மாவட்ட விவசாய சங்க செயலாளர் தோழர் வி. ஏ கருப்பசாமி அவர்கள் அ. இ வி ச.மாநாடுமுடிவுகள் பற்றி விளக்கவுரை செய்தபின் பண்ணை தொழிலாளர் சங்கம் அமைத்து நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

## நிர்வாகக் குழு தேர்வு

தோழர்கள் எம். தங்கச்சாமி (சி ஐ டி யூ சங்க செயலாளர்) அவர்கள் தலைவராகவும், எம். மாரியப்பன் உதவித் தலைவராகவும் ரா. சண்முகவேல் செயலாளராகவும், என். ஆதிமூலம் உதவிச் செயலாளராகவும், வீ. செல்லையாத் தேவர் பொருளாளராகவும் மற்றும் நிர்வாக உறுப்பினர்களாக பெ. சுப்பிரமணியம், க. வேல்ச்சாமி. வீ. மாரியப்பன் ஆகியோர்தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

தற்போது விலைவாசிகள் உயர்ந்து இருப்பதால் இன்றுள்ள சமபளம், பேட்டா முதலியவைகளை உயர்த்திக் கேட்கவும், வேலை நேரத்தை 8 மணி நேர வேலையாகக் குறைக்கவும், இதர கோரிக்கைகளைப் பெறவும் போராட்டம் நடத்துவதென முடிவு செய்யப் பட்டது.

---

# திண்டுக்கல்லில் பி.ஆர்.சி.தொழிலாளர் உண்ணுவிரதம்

திண்டுக்கல், ஜூன். 28—

திண்டுக்கல் பஸ நிலையம் ...னனர் பாண்டியன் ...ாக்குவரதது தொழிலா...ர்கள உண்ணுவிரதம ...சன்ற 24ந் தேதிதுவங்கி...து.

முதல்நாள் கணேசன், ...ஜசுதாஸ் ஆகியோர் ...ண்ணுவிரதமிருந்தனர். ...உண்ணுவிரததததை தோழர் ...எஸ். எம். மரைக்காயர் ...வக்கி வைத்தார்.

25-ந் தேதி தோழர்கள் ...சிவாசுன், மாணிக்கம் ...கியோரும, 26-ம் தேதி ...தோழர்கள்பாண்டுரெங்கன் ...ணிக்கைராஜ் ஆகியோ... உண்ணுவிரதம் இருந்...தனர்.

...7-ம் தேதி நான்காவது ...ளியில் தோழர் என். ராஜு. ஜி. அந்தோனிசாமி ஆகியோர் உண்ணுவிரதம் இருந்தனர்.

28-ம் தேதி தோழர்கள் கிருஷ்ணன, விருமமாண்டி ஆகியோர் உண்ணுவிரதம இருந்தனர்.

தினசரி காலையிலும் மாலையிலும் பஸ்நிலைய முனனர் ஆர்ப்பாட்டமும் நடைபெற்றது. ஆதரவு ஊர்வலங்களும் நடததப்பட்டன.

பழிவாங்கும் இடமாற்றததை ரத்து செய்தல், பாரபட்சமான சம்பளத்தை ஒழித்தல், 30 சதவீதபோனஸ், ஜனநாயக முறையில் தேர்தல் நடத்தி சங்கததை அங்கீகரித்தல் போன்ற கோரிக்கைகளைத் தொழிலாளர்கள் முன் வைததுள்ளனர்.

---

# லால்குடி தாலுகா

# விவசாயத் தொழிலாளர் சிறப்பு மாநாடு

**3-7-74 புதனன்று லால்குடியில் நடைபெறும்.**

காலை 11 மணிக்கு **பூங்காவனம் திரை அரங்கில் பிரதிநிதிகள் மாநாடு.**

மாலை 6 மணிக்கு **சிவன் கோவில் திடலில் பொதுக்கூட்டம்**

**தோழர்கள்:**

**ஆர். உமாநாத்**

**ஆர். ராமராஜ்**

(தமிழ்நாடு விவசாயிகள் சங்கத் தலைவர்)

**ஜி. வீரய்யன்**

(தமிழ்நாடு விவசாயிகள் சங்க செயலர்)

பி. ராமச்சந்திரன், கே. வரதராஜன்

எஸ்.சுயம்பிரகாசம், எம்.கே.தங்கராஜ்

எஸ். லூர்துசாமி ஆகியோர் பேசுவர்.

# இன்றைய ... பொருளாதார நிலை-5

## இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)மத்தியக்குழு தீர்மானம்

### (நேற்றைய தொடர்ச்சி)

**மதுரை. ஜூலை.1—**

**இந்திய நாட்டில் நிலவும் அரசியல், பொருளாதார நிலைமை பற்றி இந்தியக்கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யின் மத்திய குழு நிறைவேற்றிய தீர்மானத்தின் நான்கு பகுதிகள் முந்தைய இதழ்களில் வெளியாகியுள்ளன. இன்று அதன் இறுதிப்பகுதி பின்வருமாறு:**

உத்திரப்பிரதேசத்திலும், ஒரிசாவிலும் அவர்கள் தொடர்ந்து காங்கிரஸ் அரசாங்கங்களை ஆதரித்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய ஆதரவு இல்லை என்றால், இந்த மாநிலங்களில் காங்கிரஸ் அரசாங்கங்கள் பதவியில் நீடிக்க முடியாது. மேற்கு வங்கத்தில் முற்போக்கு ஜனநாயக கூட்டணியிலிருந்து இவர்கள் சம்பிரதாயமாகத்தான் வெளியேறியிருக்கிறார்கள். இருப்பினும், இடதுசாரி, ஜனநாயக கட்சிகளுடன் சேர்ந்துகொண்டு காங்கிரஸ் அரசாங்கத்தின் கொள்கைகளை உறுதியாக எதிர்க்கப் போவதல்லை என்பதை வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் தெளிவாகக் கூறிவிட்டார்கள்.

### இந்திராவின் ஏமாற்றுப்பிரச்சாரம்

வலதுசாரி பிற்போக்கு சக்திகள் பலமடைவதற்கு பிரதானகாரணமாகஅமைந்திருப்பது அரசாங்கமும், சுயநல சக்திகளுக்கு ஆதரவு கொடுக்கும் அதனுடைய கொள்கைகளும்தான். உண்மை நிலை இவ்வாறு இருக்க, வலதுசாரி பிற்போக்கு சக்திகளை எதிர்த்து, காங்கிரஸ் அரசாங்கம் போராடுகிறதுஎன்று பிரதமர் இந்திரா காந்தி பிரச்சாரம் செய்து வருகிறார்.

பிரதமரின் இந்த ஏமாற்றுப் பிரச்சாரத்தை வலது கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் வேண்டுமென்றே மூடிமறைக்கிறார்கள்.

### எச்சரிக்கை

எனவே மத்திய கமிட்டி ஒரு அம்சத்தை தெளிவாக்க விரும்புகிறது. அதாவது, அரசாங்கத்தின் மக்கள் விரோத கொள்கைகளை எதிர்த்துப் போராடும் அணிகளின்பக்கம்வலதுகம்யூனிஸ்டுகட்சி வரும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் மத்திய கமிட்டி வரவேற்கும். அதே சமயத்தில், காங்கிரஸ் ஆட்சியாளர்களுடன் சமரசம் செய்து கொள்ளும் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் அடிப்படைக்கொள்கைக்கு எதிராக மக்களை மத்திய கமிட்டி எச்சரிக்கை செய்யாமல் இருக்க முடியாது.

### கூட்டணிக் கட்சிகளிடையே நல்லிணக்கம்

மேற்கு வங்கத்தில் இடதுசாரி கட்சிகளின் ஐக்கிய முன்னணியானது—பரஸ்பர நல்லிணக்கத்துடனும், ஒத்துழைப்புடனும்—பலம் பெற்று வருவதையும், மேலும் ஒன்று திரண்டு வருவதையும் கண்டு மத்திய கமிட்டி திருப்தி தெரிவிக்கிறது. மேற்கு வங்கத்திலும், கேரளாவிலும் நமக்கும், நம்முடைய கூட்டாளிகளுக்குமிடையே நல்ல நம்பிக்கையும், நல்லிணக்கமும் இருந்து வருவதையும் மத்திய கமிட்டி பார்க்கிறது.

இந்த இரண்டு மாநிலங்களிலும் ஒன்றுபட்ட அறைகூவல் விடுக்கப்பட்டதன் காரணமாக, பொது நடவடிக்கைகள் கட்டவிழ்த்து விடப்பட்டன. ஆளும்கட்சிக்கெதிரான மக்களுடைய எதிர்ப்பையைப் படுத்துவதிலும், ஒன்றுபடுத்துவதிலும் இந்தப் பொது நடவடிக்கைகள் பிரதானமான பாத்திரத்தை வகித்திருக்கின்றன.

### அகில இந்திய நடவடிக்கைகள்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) க்கும், சோஷலிஸ்ட் கட்சிக்கும் இடையே உள்ள உறவுகளும், கூட்டுப் போராட்டங்களும் மேலும் மேலும் பலம் பெற்று வலுப்பெறுவது குறித்தும் மத்திய கமிட்டி திருப்தி அடைகிறது பொது நடவடிக்கைக்காக நாட்டில் உள்ள எல்லா இடதுசாரி, ஜனநாயககட்சிகளையும் ஒன்று சேர்க்கும் பொருட்டு உறுதியான நடவடிக்கை எடுத்ததில், இரண்டு கட்சிகளும் காட்டிய நல்லிணக்கம்முக்கியமானதொரு அம்சமாகும். கடந்த ஏப்ரல் 4, 5 தேதிகளில் டெல்லியில் நடந்த கூட்டத்திற்கு இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளைக் கொண்டு வருவதற்கு இந்த நல்லிணக்கம் உதவிகரமாக இருந்தது. அந்த டெல்லிக் கூட்டத்தின் முடிவுப்படிதான், 'மே 8ம் தேதியன்று அகில இந்திய கண்டனநாள்' அனுஷ்டிக்கப்பட்டது. அதன் பிறகு இரயில்வே வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாக எல்லா கட்சிகளுடைய, வெகுஜன ஸ்தாபனங்களுடைய ஒன்றுபட்ட நடவடிக்கை ஏற்பட்டது.

### இடதுசாரி ஜனநாயக கட்சிகளின் கடமை

எனவே, சீறி எழுந்து கொண்டிருக்கும் இந்த வெகுஜன போராட்டங்களையும், ஒன்றுபடவேண்டும் என்ற பேரார்வத்தையும், ஆளும் கட்சி ஏவி விட்டிருக்கும் மிருகத்தனமான அடக்குமுறையையும் கருத்தில் கொண்டு பார்க்கும் பொழுது, எல்லா இடதுசாரி ஜனநாயகக் கட்சிகளுக்கும், தனிச்சிறப்பு வாய்ந்த வரலாற்றுக் கடமை ஒன்று இருக்கிறது. அந்தக் கடமை என்ன? எல்லா இடதுசாரி ஜனநாயகக் கட்சிகளும் ஒன்று சேரவேண்டும்; மேலும் மேலும் போராட்டங்கள் வளர்ந்து கொண்டு வருகிறதே, அந்த போராட்டங்களின் சுமைகளையெல்லாம் தாங்கிக்கொள்ள வேண்டும்; இந்த நாட்டில் ஜனநாயகம் இருக்குமா அல்லது சர்வாதிகார, போலீஸ் ஆட்சி வெற்றி பெறப்போகிறதா என்பதையும் இந்தக் கட்சிகள் தீர்மானிக்கவேண்டும்.

மக்களை எந்த அடிப்படைக் கொள்கைப் பிரச்சினைகளின்பால் நாம் திரட்டப் போகிறோமோ, அந்த அடிப்படைக் கொள்கைப் பிரச்னைகளை எழுப்பக்கூடிய போராட்டமாகும் இது. தன்னை ஓர் அரசியல் கட்சி என்று கூறிக்கொள்ளும் எந்த ஒரு கட்சியும் இந்தக் கடமையினின்று நழுவ முடியாது.

எனவேதான், மாற்றுக்கொள்கைகளுக்கான பொதுவான போராட்டத்தை நடத்துவதற்கு ஒன்றுபட்டு முன்வர வேண்டும் என்று எல்லா இடதுசாரி, ஜனநாயக கட்சிகளையும் மத்திய கமிட்டி அறைகூவி அழைக்கிறது,

அதே சமயம், சமீபத்திய போராட்டங்களின் விளைவாகத் தோன்றியிருக்கக் கூடிய உடனடிப் பிரச்னைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று இந்தக் கட்சிகளை மத்தியக் கமிட்டி வேண்டிக்கொள்கிறது.

### ஒன்றுபடுக!

இரயில்வேத் தொழிலாளிகள்,மத்திய அரசு ஊழியர்களுக்கு எதிராக போடப்பட்டிருக்கும் வேலைநீக்க உத்திரவுகளை மத்திய அரசாங்கத்தை திரும்பப்பெறச்செய்வதற்காகவும், கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்வதற்காகவும், இரயில்வேத் தொழிலாளர்கள மீதும், வேலைநிறுத்தம் செய்த மத்திய அரசு ஊழியர்கள மீதும் போடப்பட்டிருக்கும் வழக்குகளை திரும்பப் பெறச் செய்வதற்காகவும், அனைத்து வெகுஜன ஸ்தாபனங்களும், இடதுசாரி,ஜனநாயகக்கட்சிகளும் ஒன்றுபட்ட போராட்டத்தை நடத்தவேண்டும். இது மிகவும் முக்கியமானதொரு ஜனநாயக கடமையாகும்.

இரயில்வேத் தொழிலாளர்களுக்கும் ஊழியர்களுக்கும் வெகுஜன ஆதரவு இன்னும் தொடர்ந்து நீடிக்கிறது என்பதையும், ஜனநாயக இயக்கம் போராடியவர்களைக் கைவிட்டு விடாது என்பதையும் இதன் மூலம்தான் நாம் உறுதி செய்ய முடியும். அது போலவே, ஜனநாயக, சிவில உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்கான விரிந்த இயக்கத்தையும், ஜனநாயக சக்திகள் தொடர்ந்து முன் நடத்திச் செல்ல வேண்டும். இந்த இயக்கத்தில், ஒருகட்சி ஆட்சி ஏற்படும் அபாயத்தை விளக்கிச் சொல்ல வேண்டும்.

### மக்களின் முக்கிய பிரச்னைகள்

மக்களுடைய வாழ்க்கைப் பிரச்னை பயங்கரமான விலைவாசி உயர்வு, உண்மை ஊதியமும், வருமானமும் குறைந்து கொண்டே போவது உத்திரவாதப்படுத்தப்பட்ட உணவு விநியோகப் பிரச்னை, வாழ்க்கைக்குத் தேவையானவற்றின் விலைவாசிகளைக் குறைப்பது, உத்திரவாதமானதொரு பொது விநியோக முறை ஆகிய இவையெல்லாம் மேற்கூறியவற்றைவிட மிக முக்கியமான பிரச்சினைகளாகும். மேலும், நகரங்களிலும் கிராமப்புரங்களிலும் சாபக்கேடாக விளங்கும் பெரும் வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சனையும் இவைகளோடு சேர்ந்து கொள்கிறது.

### இடதுசாரி கட்சிகளால் முடியும்

மக்களைப் பாதுகாக்கவும், நல்வாழ்வு, வாழ்க்கை நிலைமைகள், ஜனநாயக உரிமைகள் ஆகியவற்றிற்கான போராட்டத்தை வழி நடத்திச் செல்லவும் தங்களுடைய சக்தியை ஒன்றுபடுத்துமாறு எல்லா இடதுசாரி,ஜனநாயக சக்திகளையும் மத்தியக் கமிட்டிகேட்டுக் கொள்கிறது.

இத்தகைய போராட்டங்களின் மூலமாகத்தான், தற்போது நிலவும் ஏற்றத்தாழ்வான சமூக அமைப்பிற்கு மக்கள் சம்மட்டி அடி கொடுக்க முடியும்.வளர்ந்து வரும் வெகுஜனப் போராட்டங்களுக்கு தேவையான திசைவழியையும், கண்ணோட்டத்தையும் கொடுப்பதற்கு இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளால் மட்டுமே முடியும்.

எனவே, ஏற்கனவே ஏற்பட்டிருக்கும் ஒற்றுமையினை மேலும் வலுப்படுத்துமாறும் ஜனங்களுடைய உணர்வுகளுக்கும், தியாகங்களுக்கும் நியாயம் வழங்கும் பொருட்டு இந்த ஒற்றுமையினை மேலும் வளர்க்குமாறும் அனைத்துக் கட்சிகளையும் மீண்டுமொரு முறை மத்திய கமிட்டி வலியுறுத்துகிறது.

—முற்றும்

---

தோழர் ...

விலை: ...

வெளியீடு: ...

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (...

தமிழ் மாநிலக் குழு,

6/16 பைபாஸ் ரோடு,

மதுரை-18.

---

### இந்தியா சிமெண்ட் தொழிலாள[ர்] கூட்டுறவு பண்டகசாலை தேர்தலி[ல்]

## சி. ஐ. டி. யூ. வெற்றி...

சங்ககிரி, ஜூன். 23— சங்ககிரி இந்தியா சிமெண்ட் ஆலை தொழிலாளர் கூட்டுறவு பண்டகசாலையில் இந்த ஆண்டு ஜூன் மாதத்துடன் முடிவடையும இரண்டு நிர்வாகிகளின காலி ஸ்தானங்களுக்கான ரகசிய வாக்கெடுப்பு தேர்தல் சென்ற 22—6—74 சனிக்கிழமையன்றுபண்டகசாலை அலுவலகத்தில நடைபெற்றது. மொத்தம இதில் 11 பேர்கள் போட்டியிட்டனர்.

இதில் இங்குள்ள சங்ககிரி சிமெண்ட் ஆலைத் தொழிலாளர் முன்னேற்ற சங்கம (சிஐடியூ) சார்பில் இரண்டு வேட்பாளர்கள் தோழர் வி. கே. வெங்கடாசலம் (சங்க பொருளாளர்) தோழர் எஸ். பாலு [சங்க உறுப்பினர்) போட்டியிட்டனர். இருவரும பெருவாரியான வாக்குகள் பெற்று மகத்தான வெற்றி பெற்றனர்.

ஆலைத் தொழிலாளர்கள். அலுவலக ஊழியர்கள், இந்தியா சிமெண்டஸ், பள்ளி ஆசிரியப் பெருமக்கள் பண்டக சாலை அங்கத்தினர்களானோர் மொத்தம் 572 பேர்கள் வாக்களித்தனர்.

| | |
|---|---|
| பதிவான மொத்த வாக்குகள் | 1082 |
| சி. ஐ. டி. யூ. வேட்பாளர்கள | |
| தோழர், வி. கே. வெங்கிட்டாசலம 289 வாக்குகள் | |
| தோழர், எஸ். பாலு | 258 |
| செல்லாதது | 6 |

எதிர்த்துபோட்டியிட்ட மற்ற ஒன்பது பேர்களும் மிக குறைந்த வாக்குகள் பெற்று தோல்வி அடைந்துள்ளனர்.

இத்தேர்தலில், சி; ஐ டி யூ.வை தோலவியுறச் செய்வதற்காக வாக்குகளை சிதறடிக்கவும், கூடுதல் வே... பாளர்களை நிறுத்தி வை... கையாண்ட நிர்வா... ஐ என. டி. யூ. சி. ஆ... வற்றின் மறைமுக த... ரங்களை முறியடிக்கும்வ... யில் சி ஐ டி. யூ. ... பாளர் வெற்றி ... கண்டு தொழில... ஆதரவாளர்க... மகி... யுடன் வரவே...னர்.

வெற்றி... ற சி.ஐ.டி.யூ. வேட்பா... களை ஆலைக்குள்ளிரு... தொழிலாளர்கள் வெற்... முழக்ககோஷங்களை எழு... ஊர்வலமாக அழைத்து... தனர். பின்னர் சங்கத்தி... நடைபெற்ற கூட்டத்தி... வெற்றி பெற்றவர்களை வா...தியும், வாக்களித்த ஆ...னவருக்கும், ஆதரவளித்த...ர்களுக்கும் நன்றி தெரி... தும சங்கச் செயலாளர் ... தோழர் கே. கருணாகரன் ... செயலாளர், தோழ... எஸ் ஆர். ஜானகிராமன் ... ஜே. சாமுவேல்ஆகியே... பேசினர்.

கடந்த ஆ...டுகளில் தி மு க. வில் ...ந்த இந்த சங்கம் சி. ... யூ. வில் இணைக்கபபட்டபின் நடைபெற்ற பண்டகசாலை தேர்தலில இன்றைய சி. ஐ. டி யூ வின் வெற்றி குறிப்பிடத்தக்கதாகும்.

---

## சோசலிஸ்ட் நாடுகளில்

# உழைக்கும் பலன் மக்கள் நலனுக்கே

முதலாளித்துவ நாடுகளில் போல் அல்லாமல் சோசலிஸ்ட் நாடுகளில் மக்களின் உழைப்பின் பலன் அவர்களின் வாழ்க்கைத் தரத்தையும், கலாச்சாரத் தேவைகளையும் தரமான முறைகளில் உயர்த்தவே பயன்படுகிறது என்பது அந்நாடுகளின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாகும்.

### பண வீக்கமும் விலை உயர்வும் இல்லை

அதனால்தான் அந்நாடுகளில் சமூகநலனும், மக்கள் நலனும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்திருக்கின்றன.

மனிதனைமனிதன் சுரண்டுவதற்கே இடமில்லை என்பதால் அந்நாடுகளில் பண வீக்கம், விலைவாசி உயர்வு போன்ற கொடுமைகளுக்கு இடமில்லை. ஆனால் விலைவாசி உயர்வும், பணவீக்கமும்இல்லாத முதலாளித்துவ நாட்டை கூற முடியுமா?

10 ஆண்டுகளுக்கு முன்பு சோவியத் மக்கள் தங்களுக்கு வேண்டிய ரொட்டி, பால், முட்டைஆகிய அத்தியாவசியப் பொருட்களை என்ன விலைக்கு வாங்கினார்களோ அதே விலைக்குத்தான் இன்றைக்கும் வாங்குகிறார்கள்.

ஆனால் திட்டத்தின் மூன்றே ஆண்டுகளில் தனி நபரின் வருமானம் 12 சதவீதம் உயர்ந்துள்ளது. அது மட்டுமல்ல, கல்விக்கும், வைத்தியத்திற்கும் தேவையான உதவிகள் 'இலவசமாக அரசாங்கத்தால் கொடுக்கப்படுவது அதிகரித்துள்ளது.

ஆனால் முதலாளித்துவ நாடுகளிலோ போராடிப் பெறும் சம்பள உயர்வை அந்நாடுகளின் அரசாங்க ஆதரவோடு முதலாளிகள் ஏற்றும் விலை உயர்வுகள் விழுங்கி விடுகின்றன.

### உற்பத்திப் பெருக்கம்

சோசலிஸ்ட் சமுதாய அமைப்பின் சிறப்பு அமசங்களின் காரணமாக தேசிய உற்பத்தியைப் பெருக்குவதில் கண்ணுங்கருத்துமாக ஈடுபட்டுள்ளனர்.

அதனால்தான் சுமார் இரு நூறு ஆண்டுகால சரித்திரத்தையுடைய அமெரிக்க முதலாளித்துவத்தை 57 ஆண்டுகால சரித்திரம் கொண்ட சோவியத் யூனியன் பல்வேறு துறைகளில் மிஞ்சியுள்ளது.

அந்த அடிப்படையில் கடந்த ஆண்டு 67 கோடி டன் நிலக்கரியும்9கோடியே 60 லட்சம் டன் இரும்புத் தாதுவும், 11 கோடி டன் சிமிண்டும் சோவியத்தில் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன.

மேலும், மின்சாரப் பொருட்கள், என்ஜின்கள் போன்ற இயந்திரங்கள் அமெரிக்காவைவிட அதிகமான அளவில் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன.

அதே போல் சீனி, பால் வெண்ணை போன்ற பொருட்களிலும் அமெரிக்காவைவிட அதிக உற்பத்தியே.

### தொழில் துறையில்

தொழில்துறை உற்பத்தி மட்டும் முந்திய ஆண்டைவிட 73ல் ஏழரை சதவீதம் உயர்ந்துள்ளது. மேலும், இருந்து வந்த மில்களும், தொழிற்சாலைகளும் விரிவுபடுத்தப்பட்டது மட்டுமின்றி 400 புதிய பெரிய தொழிற்சாலைகள் கட்டப்பட்டுள்ளன.

கடந்த ஆண்டில் மட்டும் 91 ஆயிரத்து 500 கோடி கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டது.

### விவசாயத்தில்

1973ல் 22 கோடியே 25 லட்சம் டன் கோதுமை உற்பத்தி செய்யப்பட்டுள்ளது.

விவசாயத் துறையை பெருக்குவதற்கு கடந்த ஆண்டில் 7200 கோடி ரூபிள் அரசாங்கத்தால் செலவழிக்கப் பட்டுள்ளது.

அரசாங்கப்பண்ணைகளுக்கும் கூட்டுப்பண்ணைகளுக்கும் 9 லட்சத்து 50 ஆயிரம் டிராக்டர்களும் 6 லட்சம் லாரிகளும் ஏனைய வண்டிகளும் சப்ளை செய்யப்பட்டுள்ளன. 15 கோடி டன் உரம் விநியோகம் செய்யப்பட்டுள்ளது.

இவ்வனைத்து உழைப்பு முறைகளும் குறைந்த செலவில் அதிகமான அளவில் தரமான பொருட்களை தயாரிப்பது என்ற கொள்கைகளின் கீழ் மேற்கொள்ளப்படுகின்றன.

### சோசலிஸ்ட் நாடுகள்

இதனால் சோவியத நாட்டில் திட்டத்தின் காலம் சுருங்குகின்றன. திட்ட காலத்தின் குறியை விட உற்பத்தி அதிகரித்து விடுகின்றன.

இது சோவியத்திற்கும மட்டும உள்ள பொதுவான அம்சமல்ல, சோசலிஸ்ட் நாடுகள் அனைத்திற்கும் இதுவே பொதுவான அம்சம்.

மேலும் முதலாளித்துவ நாடுகளில் வளர்ச்சியடைந்த நாடுகள், வளர்ச்சி அடையாத நாடுகளுக்கு கடன்கொடுத்தாலும்,உதவி செய்தாலும், உறவு கொண்டாலும் அவைகளினுள் சின்ன மீனைப் போட்டு, பெரியமீனைப்பிடிக்கும்கொள்கையே கடைப்பிடிக்கப்படுகிறது.

### பொருளாதார உதவிக் கவுன்சில்

ஆனல்,ஐரோப்பிய சோசலிஸ்ட நாடுகள் "பரஸ்பர பொருளாதார உதவிக் கவுன்சில்" என்னும் பொருளாதார அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு தங்களுக்குள் பரஸ்பர உதவிகள் செய்து கொள்ளுகின்றன. ஒவ்வொரு நாடும் மற்றொரு சோசலிஸ்ட் நாட்டின் முன்னேற்றத்திற்கு உதவுகின்றன.

இந்த அடிப்படையில்தான் கடந்த ஆண்டில் மட்டும் சோசலிஸ்ட் நாடுகளான பல்கேரியாவில் 8 சதவீதமும், ஹங்கேரியில் 5 சதவீதமும், போலந்தில் 10 சதவீதமும், சோவியத் யூனியனில் 5 சதவீதமும், செக்கோஸ்லேவியாவில 6 சதவீதமும் தனிநபர் வருமானம உயர்ந்துள்ளன.

அதிகம் வளர்ச்சியடைந்த சோசலிஸ்ட நாடுகள் குறைவாக வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு அதிக உதவி செய்ய வேண்டும் என்பதே பரஸ்பர பொருளாதார உதவிக் கவுன்சிலின் அடிப்படையாகும்.

இந்த அடிப்படையில்தான் அனைத்து ஐரோப்பிய சோசலிஸ்ட் நாடுகளும் மங்கோலிய நாட்டின் தேசியபொருளாதாரம் வளர்ச்சியடைய அனைத்து உதவிகளையும் செய்து வருகின்றன.

---

### பாட்னு குண்டு வெடிப்பு சம்பவம்

## ஒரு மாதத்துக்கு பின்பு 'இந்திரா சேனை' தலைவர் கைது

பாட்னு, ஜூன். 28— பீகார் மாநிலத்தின் தலைநகரான பாட்னுவில் குண்டு ஒன்று வெடித்த சம்பவம் சம்பந்தமாக.'இந்திராசேனை' யின் தலைவர் எனப்படும் ராஜேஸ்வர் பிரசாத்சிங், சம்பவம நடந்து ஒருமாதகாலத்துக்குப் பினபு கைது செய்யப் பட்டார்.

இங்குள்ள டாக்பங்களாவில், 'இந்திரா சேனை' அலுவலகமாகச் செயல்பட்டு வந்த ஓர் அறையில் கள்ளத்தனமாக வைத்திருந்த குண்டு மே 25-ந் தேதியன்று வெடித்து பகிரங்கமாகி விட்டது.

இது சம்பந்தமாக அந்த அறையில இருந்த ஒருவர் உடனே போலீசாரால் கைது செய்யப் பட்டார்.

இச்சம்பவம் சமபந்தமாக போலீஸ் பதிவு செய்திருந்த வழக்கில்முக்கிய எதிரியான இந்திரா சேனை' தலைவரை போலீசார் 26-ந் தேதியன்று கைது செய்தனர்.

வழக்கறிஞரான இவர், வழக்கறிஞர் உடையுடன் வக்கீல்கள சங்க கட்டிடத்தில (பார் கவுன்சில்) இருந்தது போது போலீசார் கைது செய்துள்ளனர்.

# ...ர் பதவி... ...கரூர் அமெரிக்க ஜனாதி... நிக்சன்

வாஷிங்டன், ஜூன் 29—

தனது அரசியலுக்கு லஞ்சத்தையும் ஊழலையும் அடித்தளமாகக் கொண்ட அமெரிக்க ஜனாதிபதி நிக்சன் மீது ஒரு புதிய ஊழல் குற்றச்சாட்டை வாட்டர்கேட் கமிட்டியினரால் தொடுக்கப்பட்டுள்ளது.

## இரு ஆயுதங்கள்

முதலாளித்துவ சமுதாயத்தில் முதலாளிகள் வைத்திருக்கும் பல்வேறு ஆயுதங்களில் லஞ்சமும் ஊழலும் அவர்களின் இரண்டு ஆயுதங்கள். லஞ்ச ஊழல் பேர் வழிகளால் ஆட்டிப்படைக்கப்படும் அச்சமுதாயத்தை ஆளுகின்ற ஆளவந்தார்களும் ஊழல்களின் பிறப்பிடங்களாகவே இருக்கிறார்கள் என்பதற்கு அமெரிக்க முதலாளிகளின் பாதுகாவலனான நிக்சன் ஒரு உதாரணமாகும்.

## தூதரகப் பதவி விற்பனை

நிக்சன் மீதான புதிய ஊழல் குற்றச்சாட்டுகள் செனட்டர்கள் அடங்கிய வாட்டர்கேட் கமிட்டியின் ஒரு நம்பகமான அறிக்கையிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டன.

அந்த ரிப்போர்ட்டின்படி கடந்த அண்டு நவம்பர் மாதம் 7-ந்தேதி 8 வெளிநாடுகளுக்கு 5 தூதவர்கள் ஜனாதிபதி நிக்சனால் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இல்லை, 8 பேருக்கு தூதரக பதவியை அவர் விற்பனை செய்துள்ளார்.

தூதரகப் பதவியை ஏலம் விட்டுள்ளார் என்று கூடக் கூறலாம்.

## தேர்தல் நிதியா? சொந்த நிதியா?

தூதர்களாகசென்றஅந்த எட்டு நாணயஸ்தர்களும் குறைந்த பட்சம் 25 ஆயிரம் டாலர் (சுமார் 1 லட்சத்து 90 ஆயிரம் ரூபாய்) வரை கொடுத்துள்ளனர். இதன் மூலம் 7 லட்சத்து 6 ஆயிரம் டாலர் (சுமார் 53 லட்சம் ரூபாய்) நிக்சனுக்குக்கிடைத்தது இந்தப்பணம் அனைத்தும் நிக்சனின் தேர்தல் வேலைக்காம்.

இவ்விபரத்தை அந்த ரிப்போர்ட் தெரிவிக்கிறது.

இந்தப்பணத்தில் தேர்தல் வேலைக்கு எவ்வளவு, நிக்சனுக்கு எவ்வளவு என்பது நிக்சனுக்கும் அவரது கூட்டாளிகளுக்கே வெளிச்சம்,

மேலும் அந்த வாட்டர்கேட் ஊழல் கமிட்டி நிக்சனின் சட்ட ஆலோசகரும் நிதியாளருமான ஹெர்பர்ட் கால்ம்பேச் என்பவர் தூதரக பதவிகளை விற்பனைசெய்வதற்கு நிக்சனுக்கு உதவியவர்களில் முதன்மையானவர். அதற்காக அவர் தண்டிக்கப்படவிருக்கிறார் என்றும் அக்கமிட்டியின் ரிப்போர்ட் கூறுகிறது.

## பதவி பரிமாற்றத்திற்கும் லஞ்சம்

மேலும் தூதரகத்தை பரிமாற்றிகொள்ள ஏற்பாடு செய்வதிலும் நிக்சன் கம்பெனியார் ஒரு லட்சம் டாலர் வாங்கினராம்.

டோபகோவின் தூதுவராக பணியாற்றிய சைமிஸ்டன் என்பவர் ஐரோப்பாவில் உள்ள ஒரு கௌரவமான தூதுவராலயத்திற்கு தூதுவராக விரும்பினராம். அவ்விருப்பத்தின் காரணமாக அவருக்கும் நிக்சன் கம்பெனிக்குமிடையே பேரம் பேசப்படுகிறது. அப்பேரத்தின் அடிப்படையில் சைமிஸ்டான் ஐரோப்பாவில் உள்ள ஒரு நாட்டின் தூதுவராக மாற்றப்படுகிறார். நிக்சன் நிதியில் ஒரு லட்சம் டாலர் (சுமார் 7½ லட்சம் ரூபாய்) சேர்ந்து விடுகிறது.

## முதலாளித்துவத்தின் ஈனத்தனம்

சுதந்திர உலகம் ஜனநாயகத்தின் பிறப்பிடம் என முதலாளித்துவ கைக்கூலிகளால் புகழாரம் சூட்டப்படுகிறது. அந்நாடுகளில் இப்படிப்பட்ட ஈனத்தனமான செயல்களை செய்ய வாய்ப்பும், வசதியும அதற்கான சுதந்திரமும் இருப்பதால் தான் அச்சமூகத்திற்கு அப்புகழாரம் சூட்டப்படுகிறது போலும்.

# ஜூலை 2-ல் திண்டுகலில் பட்டினி ஊர்வலம்

திண்டுக்கல். ஜூலை 1—

சித்தரேவு, கன்னிவாடி, ரெட்டியார்சத்திரம், எரியோடு, அய்யலூர் பாளையம் ஆகிய இடங்களிலிருந்து விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் ஜூலை 2 அன்று திண்டுக்கல் சப்-கலெக்டர் அலுவலகம் நோக்கி பட்டினி ஊர்வலம் நடத்துவர்.

500 குடும்பங்களுக்கு ஒரு மலிவு தானியக்கடை, ஒரு கிலோ அரிசி 1 ரூபாய்க்கு வேண்டும், ஒரு கிலோ சோளம் 60 காசுக்கு விநியோகித்தல் போன்ற கோரிக்கைகளுக்காக. இந்த பட்டினி ஊர்வலம் நடத்தப்படுகிறது.

# ஈரோடு சி. ஐ. டி. யூ. சங்கங்களின் புதிய அலுவலகம்

சி.ஐ.டி.யூ. சங்கங்களான தமிழ்நாடு மின்சார தொழிலாளர் சங்கம், (ஈரோடு உற்பத்தி வட்டம் அன்ட் ஈரோடு மின் திட்டம்,)

ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன், கோயமுத்தூர். கிளை: ஈரோடு: அன்ட் பவானி தாலுக்கா கமிட்டி,

சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி ஈரோடு கிளை,

ஆகியவற்றின் புதிய அலுவலக முகவரி.

**15, S·K·C. ரோடு**

**ஈரோடு—1**

**கோவை மாவட்டம்.**

# கட்டிட நிதி

| | ரூ. பை |
|---|---|
| திருப்பூர் ஆண்டிப்பாளையம் எம். பழனிச்சாமி — வெள்ளியம்மாள் திருமணத்தையொட்டி | 20—00 |
| சென்னிமலை ஏ. பொன்னுசாமி— முத்துலட்சுமி திருமணத்தையொட்டி | 5—00 |
| வீரவநல்லூர் கே. எஸ். வைத்தியநாதன்— அலமேலு திருமணத்தையொட்டி | 5—00 |
| இருகூர் கிருஷ்ணம்மாள் சிலவுக்கு மகன் கொடுப்பதிலிருந்து மாதம் ரூ. 1 வீதம் சேர்த்து அளித்தது | 12—00 |
| பெரியகுளம் எம். ராமகிருஷ்ணன் மகள் சரோஜாவுக்கும், போடி வெள்ளையப்பன் ஆசாரி மகன் பழனிசாமிக்கும் போடியில் நடைபெற்ற திருமணத்தையொட்டி | 10—00 |
| போடி குப்பிநாயக்கன்பட்டி பூச்சித்தேவர் குமாரர் வீரணனுக்கும் சுப்பையாத்தேவர் மகள் அம்சமணிக்கும் நடைபெற்ற திருமணத்தையொட்டி | 10—00 |
| போடித் தோழர் நடராசனுக்கும்— கஸ்தூரிக்கும் தோழர் வி. ஏ. கருப்புசாமி தலைமையில் நடைபெற்ற திருமணத்தையொட்டி | 10—00 |
| திண்டுக்கல் கே. பாலகிருஷ்ணன் அவர்களுக்கு ஆண் குழந்தை பிறந்ததை முன்னிட்டு | 2—00 |
| வடுகன்பட்டி நீலமேகம்—காந்திமதி திருமணத்தையொட்டி தோழர் என். வெங்கடாசலம் மூலம் | 9—00 |

# கவிஞர் வ·ஆ·ஞானசாமி கைது

சென்னை, ஜூன் 29—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் திருவொற்றியூர் டவுன் கமிட்டி உறுப்பினரான கவிஞர் வ ஆ ஞானசாமியை போலீசார் கைது செய்துள்ளனர்.

இங்கு 23-ம் தேதி தமிழர் படையினர் வன்முறையை தூண்டும் அளவில் பொதுக் கூட்டம் நடத்தி விட்டு தங்கம் தியேட்டரில் சென்று 'எம். ஜி. ஆர். படம் ஓடக் கூடாது' என்று கலவரமும் செய்தனராம்.

ஆனால் போலீசார் அடுத்த நாள் அங்கு வந்து 60 வயதை தாண்டி விட்ட தோழர் ஞானசாமியைக் கைது செய்து சென்றுள்ளனர்.

இந்த அக்கிரமச் செயலை கண்டித்து திருவொற்றியூர் டோல்கேட் அருகாமையிலிருந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் புறப்பட்ட ஊர்வலம் போலீஸ் நிலையம் வழியாக சென்று சன்னதி தெருவை அடைந்தது.

அங்கு நடைபெற்ற சர்வ கட்சி கண்டனக் கூட்டத்தில் தோழர்கள் என். கிருஷ்ணன், எஸ். கண்ணப்பன் (மார்க்சிஸ்ட்) ஞான சிகாமணி (வலது கம்யூ) கந்தசாமி (அ தி மு க) ஆகியோர் பேசினர்.

...லை ...ங்...
...அளவில்
...க்கி... ...ார இதழ்

...ச்சனைகளும் நிகழ்ச்சிகளும் ...ல... காலமாக ...ஸ்ட் கண்ணோட்டத்தில் ...படுகின்றன.

...—கலை இலக்கிய பிரச்சனைகள் ...ான கேள்விகளுக்கு ஆழமான பதில்

...தேசிய பிரச்சனைகளையும் நிகழ்ச்சிகளையும் ...க விளக்கி அவற்றின் தன்மைகளை தெளி...தும் ஒரே மலையாள வார இதழ்.

ஆசிரியர்

**இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட்**

**சிந்தா** ஒரு கம்யூனிஸ்ட் கட்டாயம் பாதுகாத்து வைக்கவேண்டிய இதழ். சிந்தாவின் ஒவ்வொரு இதழும் ஒரு அரசியல் கற்கும் மாணவனின் போற்றிப் பாதுகாக்க வேண்டிய பாட புத்தகம்.

விஞ்ஞான ஆர்வம் உடையவர்களின் அன்புக்குரிய இதழ்.

தொடர்பு கொள்க

நிர்வாகி,

**சிந்தா,**

**கொச்சி—17.**

# பி. ஆர். சி. யின் அடாதபோக்கை எதிர்த்து ...ந்து நாள் உண்ணாவிரதம் ...வின்றுடன் மு...வடைந்தது

ம...ரை, ஜூலை. 1—

பாண்டி...ன் போக்குவரத்துக் ...ழக நிருவாகத்தினரின் ...டாதபோக்கைக் கண்டித்... மதுரை, திண்டுக்கல், ...திருச்சி, கம்பம் ஆகிய ...ரங்களில் கடந்த 5 நாட்க...க நடைபெற்று வந்த ...டர் உண்ணாவிரதப் ...ாட்டம் இன்றுடன் மு...பெற்றது.

இந்... உண்ணாவிரதப் போரில் ...ி ஐ டி யூ சங்கமும் அ தி மு க சங்கமும் கலந்து கொண்டன.

## கோரிக்கைகள்

இவர்கள் கேட்கும் கோரிக்கைகள் என்ன?

குறைந்த பட்ச சம்பளம் 952 புள்ளிக்கு ரூ. 314-ம் பிறகு உள்ள ஒவ்வொரு புள்ளிக்கும் 30 பைசா வீதம் பஞ்சப்படியும் கொடுக்க வேண்டும்.

விலைவாசி விஷம்போல் ஏறுமிக்காலத்தில் ஒரே தொழிலில் ரூ 88 ரூ, 120— ரூ. 165—ரூ 211—ரூ, 280— என 5 விதமான சம்பளங்கள் இருப்பது எந்த நியாயத்தைச் சேர்ந்தது?

ஒரு நேரம் சாப்பாடு சாப்பிட்டாலே ரூ. 1-50 ஆகும் போது, தினப்பேட்டா என்று ரூ. 2 மட்டும் கொடுப்பது என்ன நீதி? ஆகவே ரூ. 5 தினப்பேட்டா கொடுக்க வேண்டும்.

மற்றும் தேர்தல் மூலம் சங்க அங்கீகாரம் செய்யப்பட வேண்டும் என்றும் கோருகிறார்கள்.

மதுரையில் நடைபெற்று வரும் உண்ணாவிரதத்தில் 29-6-74-ல் கடைசி நாளன்று சி ஐ டி யூ தோழர்கள் கண்டக்டர் வி. கோவிந்தன் டிரைவர் சேதுப்பிள்ளை டிரைவர் சே, சோமு ஆகியோர் கலந்து கொண்டனர்.

கடைசிநாள் உண்ணாவிரதத் தோழர்களுக்கு தீக்கதிர் உதவி ஆசிரியர் தோழர் ஐ. மாயாண்டி பாரதி மாலைகள் அணிவித்து துவக்கி வைத்தும, 4-ம் நாள் உண்ணாவிரதமிருந்த அ தி மு க— சி ஐ டி யூ தோழர்களுக்குப்பழரசம் கொடுத்தும் வாழ்த்திப் பேசினர். மோட்டார் தொழிலாளர் தலைவர் தோழர் மன்னார்சாமியும் வரவேற்றுப் பேசினர்.




## சாத்தூர் தாலுகாவில் குமார் குழுவினரின் நிகழ்ச்சிகள்

ஜூலை 11 சென்னல்குடி
12 வெங்கடாசலபுரம்
13 என். சுப்பையாபுரம்
14 சின்னக்காமன்பட்டி
15 மேலாண்மறைநாடு

# வருந்துகிறோம்

சென்னை ஜூலை 1—

சென்னை, எம், ஆர். எப். தொழிலாளர் சங்க இணைச் செயலாளரான தோழர் ஏ. என். சக்திவேலின் மனைவி தேவிகா தீ விபத்தில் காலமான செய்தியை வருத்தத்துடன் தெரிவிக்கின்றோம்:

இவர்கள் திருமணம் சென்ற மார்ச் மாதம் 10-ம் தேதி தான் நடைபெற்றது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

# அளித்த வாக்குறுதி...

1-ம் பக்கத் தொடர்ச்சி

தகம் ஏற்படும்.

## இனவெறி பிரச்சாரங்கள்

இதன் காரணமாகஆளும் வர்க்கங்களின் இந்த சாகசங்களை சி ஐ டி யூ வன்மையாகக் கண்டித்தும் எதிர்த்தும் வந்திருக்கிறது.

தமிழ்நாட்டில் சமீபகாலமாக தமிழர் பேரவை, தமிழர்படை, தமிழர் சேனை போன்ற அமைப்புக்கள் தோற்றுவிக்கப்பட்டு, தமிழகத்தில் வாழும் மலையாளி மக்களுக்கு எதிராக இனவெறியூட்டும் பிரச்சாரம் கிளப்பி விடப்பட்டுள்ளது.

சென்ற மாதம் சென்னையில் இப்படையினர் ஊர்வலமாக வந்து மலையாளிகள் நடத்தும் கடைகளையும் இரு தியேட்டர்களையும் தாக்கிய காலத்தில், போலீஸ் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் வேடிக்கைபார்த்துக் கொண்டிருந்தது. இதற்கு கடும ஆட்சேபனைகள் கிளம்பியவுடன், 'தமிழ்நாட்டில் உள்ள சிறுபான்மை மொழி மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படும் என்று தமிழக முதலமைச்சர் கருணாநிதி வாக்குறுதியளித்தார், ஆனாலும் அதற்குப் பின்னரும கூட முதலமைச்சரது பேச்சுக்களும், அவரது கட்சியைச் சார்ந்த தலைவர்களின் பிரச்சாரங்களும் தொடர்ந்து இனவெறியைத் தூண்டுவதாகவே உள்ளது.

சிறுபான்மை மொழி மக்களுக்கு பாதுகாப்பு அளிப்பது என்பது உண்மையானால், இனவெறியைத் தூண்டிவிடும இத்தகைய பேச்சுகளும், பிரச்சாரங்களும் உடனே நிறுத்தப்பட வேண்டும். இத்தகைய இனவெறிப் பிரச்சாரங்கள், வளர்ந்துவரும வர்க்கப் போராட்டங்களிலிருந்தும், மற்ற பிரச்னைகளுக்கான போராட்டங்களிலிருந்தும் திசை திருப்பும் சூழ்ச்சிகளே.

## தமிழ்மாநில சி. ஐ. டி. யூ. வலியுறுத்தல்

இந்த இனவெறி நடவடிக்கையின் எதிரொலியாக மற்ற மாநிலங்களில் வாழும் தமிழ் மக்களுக்கு எதிராக அம்மாநில மக்களிடையே பகைமைஉணர்ச்சியும் விரோத குரோதங்களும் ஏற்படும் ஆபத்து உருவாகும். மேலும் இம்மாநிலங்களுக்கிடையேயுள்ள நல்லுறவு பாதிக்கப்படும் அபாயமும் ஏற்படும்.

எனவே இந்த இனவெறி பிரச்சாரத்தை உடனே தடுத்துநிறுத்த வேண்டுமென்று தமிழக முதலமைச்சரையும் திமுக தலைவர்களையும் தமிழ் மாநில சி ஐ டி யூவின் நிர்வாகக் குழு வற்புறுத்துகிறது.

இதை உடனடியாகச் செய்யாவிட்டால் 'சிறுபான்மை மொழி மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படும்' என்று முதலமைச்சர் அளித்த வாக்குறுதி அர்த்த மறறதாகிவிடும.

## பாராட்டுதல்

கேரள மாநிலத்தின் தலைநகரான திருவனந்தபுரத்தில் ஒரு சில தமிழர்களின் கடைகள் ஒருசிலரால் தாக்கப்பட்டபோது, அங்கு சி ஐ டி யூ மற்றும் மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சித் தோழர்கள் விரைந்து சென்று, அமைதியை நிலைநாட்டி, சிறுபான்மை தமிழ் மக்களுக்கு பாதுகாப்பு அளிக்க, எடுத்த முயறசிகளை தமிழ்மாநில சி ஐ டி யூ பாராட்டுகிறது.

## ஒன்றுபட்ட இயக்கம்

தொழிலாளிவர்க்கப் பிரச்னைகளுக்காக தொழிலாளி மக்கள் அனைவரையும ஒற்றுமைப்படுத்தி ஓரணியில் திரட்ட ஒன்றுபட்டப் போராட்டத்திற்குத் தயாராகும்படி சி ஐ டி யூ அறை கூவல் விடுக்கும் அதே சமயத்தில், சிறுபான்மைமொழி சமூகத்தினருக்கு இனவெறி தாக்குதலிலிருந்து பாதுகாப்பு அளிப்பதும் உழைப்பாளி மக்களின் கடமையாகும் என்று சி ஐ டி யூ உணர்த்துகிறது.

இனவெறிப் பிரச்சாரத்தையும் இயக்கத்தையும் முறியடிக்கவும், சிறுபான்மை மொழி மக்களுக்குப் பாதுகாப்பளிக்கவும் ஏனைய தொழிற் சங்கங்களும், உழைப்பாளி மக்களும் ஜனநாயக எண்ணம் படைத்தோரும் ஒன்றுபட்ட இயக்கத்திற்கு முன்வரும்படி சி ஐ டி யூ அறைகூவி அழைக்கிறது.

இவ்வாறு அத்தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## பி. ராமமூர்த்தி

இக்கூட்டத்தில் சி ஐ டி யூ வின் அகில இந்தியப் பொதுச் செயலாளர் தோழர் பி. ராமமூர்த்தி அகில இந்திய ரீதியில் நடந்து வரும் அரசியல், தொழிற்சங்க இயக்கங்கள் பற்றி நீண்டதோர் உரையாற்றினார்.

தமிழ் மாநில சி ஐ டி யூ செயலாளர் தோழர் ஆர். உமாநாத் தமிழக அரசியல், தொழிற் சங்க இயக்கங்கள் பற்றி உரையாற்றினார்.

(முழு விபரம் பின்னர்)

# தி.மு.க. அரசின் அடக்குமுறைக்கு எதிராக பெருங்கிளர்ச்சி துவங்கும்

## அ. தி. மு. க. காரியக்கமிட்டி தீர்மானங்கள்

திருச்சி, ஜூலை. 1—

திருச்சி மாவட்ட அ. தி. மு. க. மாநாட்டை யொட்டி அ. தி. மு. க. வின் காரியக் கமிட்டிக்கூட்டம் ஜூன் 28ல் திருச்சியில் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## தடை செய்க

தமிழர் பாதுகாப்பு பேரவை என்ற பெயரிலும், மற்றும் பல பெயர்களிலும், தி. மு. க. வினர் நடத்துகின்ற இனவெறி வன்முறையைக் கண்டித்தும் — அவர்களது வெறிச் செயல்களை போலீசார் வேடிக்கைபார்த்துக் கொண்டிருப்பதாகக் குற்றம்சாட்டியும் 'இவற்றுக்கு முற்றுப்புள்ளிவைக்க மத்திய அரசு தக்க நடவடிக்கை எடுத்து இனவெறிப் படைகளைத் தடைசெய்ய வேண்டுமென்றும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## எதிர்ப்புக்கிளர்ச்சி

மற்றொரு தீர்மானத்தின் மூலம், தி. மு. க. அரசின் அடக்குமுறைகளைக் கண்டித்தது. சர்வாதிகாரப்பாதையிலும் வன்முறைப்பாதையிலும் போய்க்கொண்டிருக்கின்ற தி.மு.க. வை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கும் எதிர்க்கட்சிகள்மீது குறிப்பாக அ. தி. மு. க.மீது அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டிருப்பதைக் கண்டிப்பதுடன், அடக்குமுறையை எதிர்த்து ஓர் மாபெரும் கிளர்ச்சியினை எம். ஜி ஆர். தலைமையில் துவக்கிட இதர கட்சிகளையும் கலந்து முடிவெடுக்கப் போவதாகவும் குறிப்பிடப்பட்டது.

## புது அரசியல் நிர்ணயசபையைக் கூட்டுக!

மக்களின் அபிலாஷைகளைப் பிரதிபலிக்கக்கூடிய ஒரு புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கிடுவதற்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு புது அரசியல் நிர்ணய சபையை அமைக்க மத்திய அரசைக் கேட்டுக் கொள்ளும் ஓர் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

## விலைவாசிஉயர்வு

தமிழ்நாட்டில் அத்தியாவசியப் பண்டங்களின் விலைவாசிகள் பெருமளவுக்கு ஏறிவிட்டதற்கு தி. மு. க. அரசே காரணமென்றும், விலைவாசிகளைக் கட்டுப்படுத்த தி. மு. க, அரசு தவறிவிட்டதாகவும், பதுக்கல்காரர்களைச் சிறையிலடைக்கவும், கடத்தல் காரர்களையும் கள்ள மார்க்கெட் காரர்களையும் ஒடுக்கவும் தி. மு. க. அரசு தவறிவிட்டது என்றும் தி. மு க வின் முக்கிய பேர்வழிகளே இந்தக் காரியங்களில் ஈடுபட்டிருப்பதாகவும் கூறி கண்டிக்கப்பட்டது.

## பாண்டிச்சேரி

பாண்டிச்சேரி மாநிலத்தில் மீண்டும் ஒரு பொதுக் தேர்தல் நடத்த வேண்டுமாய் மத்திய அரசைக்கேட்டுக்கொண்டும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஆரம்பத்தில் சிதம்பரத்தில் கொல்லப்பட்ட அண்ணாமலை மாணவர் பாலசுந்தரத்திற்கும்; சேலம் மாவட்டத்தில் படுகொலை செய்யப்பட்ட சுகுமாரன மற்றும் டி. ஏ. மதுரம் ஆகியோர் நினைவுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

காரியக்கமிட்டிக் கூட்டத்துக்கு திரு. மா.முத்துச்சாமி எம். பி. தலைமைவகித்தார்.

# வேடசந்தூர் தாலுகாவில் விவசாய சங்கங்கள்

வேடசந்தூர். ஜூன். 29—

வேடசந்தூர் தாலுகாவின் பள்ளிகூடத்தான்புதூரில் ஜூன் 22 ல் நடைபெற்ற விவசாய சங்ககூட்டத்திற்கு தோழர் எ. பழனிசாமி தலைமை வகித்தார். தாலுக்கா விவசாய சங்க செயலாளர் தோழர், எம்.பி. மணிவேல் கலந்துகொணடு அரசியல், விலைவாசிஏற்றம், பட்டினி ஊர்வலம் ஆகியவைகளை விளக்கியபின் கீழ் கண்ட தோழர்களைக் கொணட புதியநிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தோழர் பெ.ராமசாமிதலைவராகவும் எஸ். சவுடப்பன் உதவி தலைவராகவும். அழகர்சாமி செயலாளராகவும், முத்துராஜ் உதவிசெயலாளராகவும். கே. ராமசாமி பொருளாளராகவும் மற்றும் தோழியர்கள் ச. முத்துலட்சுமி. ஏ; வீரம்மாள் தோழர்கள் கே. பழனி, எஸ். பழனி ஆகியோர் நிர்வாகக்கமிட்டி உறுப்பினர்களாகவும் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## கோண்டமநாயக்கன்பட்டி

வேடசெந்தூர் தாலூகாவைச்சார்ந்த கொண்டபநாயக்கன்பட்டியில் தோழியர் க, பேச்சியம்மாள் தலைமையில் வி. ச. அமைப்புக் கூட்டம் நடந்தது. கூட்டத்தில் தாலூக்கா வி. ச. செயலாளர் தோழர் எம். பி. மணிவேல் கலந்து கொண்டார்

கீழ்கண்ட புதிய நிர்வாகிகள் தேர்வு செய்யப்பட்டனர்.

தோழர் த. முருகன் தலைவராகவும், தோழியர் க. பேச்சியப்மாள் உதவி தலைவராகவும் தோழியர் பார்வதியம்மாள் செயலாளராகவும், தோழியர் பொன்னுத்தாய் துணை செயலாளராகவும், மற்றும் பி. காளியம்மாள், ஆர். சின்னச்சாமி, பி. மாயாண்டி தேவர் பீ. கிட்டம்மாள், பெ. இருளாண்டி ஆகியவர்கள நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர் .

# எஃகு உற்பத்தி அமெரிக்கா பிரிட்டனில் வீழ்ச்சி

பிரஸ்ஸல்ஸ், ஜூன் 29—

அமெரிக்காவும் பிரிட்டனும் எஃகு உற்பத்தியில் கடந்த ஆண்டை விட இவ்வாண்டு பின்னடைந்துள்ளன.

அமெரிக்காவில் கடந்த ஆண்டைவிட 3.1 சதவீதமும் பிரிட்டனில் 12.1 சதவீதமும் இவ்வாண்டின் எஃகு உற்பத்தி வீழ்ச்சியடைந்துள்ளது.

ஜப்பானும் கடந்த ஆண்டு உற்பத்திக்கு அதிகமாக உற்பத்தி செய்ய முடியவில்லை.

எனினும் 73-ம் ஆண்டின் உற்பத்தியளவு இவ்வாண்டும் உற்பத்தி செய்து கொண்டது.

இவ்விபரத்தை சர்வதேசிய எஃகு, இரும்பு அமைப்பு தெரிவித்துள்ளது.